[20th January 1961

*Heart disease*

*10 *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) இருதய நோயைப் போக்க மருந்து தயாரிக்கும் திட்டம் உண்டா?*

*(இ) அப்படியானால் அதன் விவரமென்ன?*

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : *ஸார், நாளுக்கு நாள் இருதய நோயினால் அதிகமான மக்கள் சாகிறார்கள். அதற்குக் காரணம் என்ன? அதைப் போக்குவது எப்படி என்று சர்க்கார் ஏதாவது யோசனை செய்திருக்கிறார்களா?*

THE HON. SRI M. A. MANICKAVELU : *இதில் இரண்டுவிதம் இருக்கிறது. ஒன்று உடம்பைச் சார்ந்தது. இன்னொன்று மனத்தைச் சார்ந்தது. உடம்பைச் சார்ந்ததற்கு மருந்து இருக்கிறது. மன வியாதிக்கு வேறு விதம்.*

SRI A. A. RASHEED : May I know whether there is any proposal to manufacture drugs to alleviate the heartbroken?

THE HON. SRI M. A. MANICKAVELU : I think the hon. Member himself is somewhat expert in that line.

*Pakkam tank*

* 11 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : *கனம் உள்ளிவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*குடியாத்தம் தாலுகா, பாக்கம் ஏரி, மராமத்து செய்யும் விஷயம் எந்த நிலையில் உள்ளது?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : An estimate amounting to Rs. 6,000 for clearing silt in Pakkam tank supply channel and an estimate amounting to Rs. 7,300 for shifting the off-take point of the channel have been approved by the Executive Engineer, Public Works Department, Vellore, and the Superintending Engineer, Madras Circle, respectively under the Special Minor Irrigation Progamme. The works will be taken up for execution shortly.

SRI V. K. KOTHANDARAMAN : *ஸார், ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி தரக்கூடிய இந்த ஏரி பல வருஷ காலமாக மராமத்து செய்யப்படாத காரணத்தினால் சென்ற ஆண்டில் உடைந்து ஊரையெல்லாம் பாழ்படுத்திற்று. இவ்வாண்டு மழை பெய்தும்கூட அந்த ஏரிக்கே தண்ணீர் வர*

முடியாத அளவுக்கு ஏரிக் கால்கள் இருப்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா? தெரியுமானல் துரிதமாக அதை மராமத்து செய்ய கவனம் செலுத்தப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏரியில் வண்டல் எடுப்பதைப் பொறுத்த மட்டில் அந்த வேலையை கிராமத்தார் செய்யவேண்டும். அவர்கள் செய்யவில்லை. மற்றபடி கரையும் சரியாக இல்லாததனல்தான் எஸ்டிமேட் தயாரிக்கப்பட்டு ரிப்பேர் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. கூடிய சீக்கிரம் அந்த வேலை பூர்த்தியாகும்.

### *Untouchability*

*12 Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தீண்டாமை ஒழிப்புப் பிரசாரத்துக்காக சினிமாப் படங்கள் தயாரிப்பதுபற்றி அரசாங்கத்தின் மூலமாக பரிசிலனை நடத்தப்பட்டு வருகிறதா?

(இ) அப்படியானல் விவரங்கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : இவ்வித தீண்டாமை ஒழிப்புப் பிரசாரத்திற்கு சினிமாப் படம் தயாரிப்பது பற்றி மத்திய சர்க்கார் சென்னை சர்க்காரைக் கலந்து ஆலோசித்தார்களா? அவ்வாறு ஆலோசித்து இருப்பின் அந்த விவரங்கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

### *Poramboke lands in Vadugapatti*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 13 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*13 Q.—SRI K. R. NALLASIVAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஈரோடு தாலுகா, வடுகப்பட்டி கிராமத்தில் உள்ள புறம்போக்கு நிலங்களின் விஸ்தீரணம் என்ன?

(இ) இவைகளில் எத்தனை விவசாயிகள் சிவாஜிமா முறையின் கீழ் விவசாயம் செய்து வருகின்றனர்?

(உ) எத்தனை ஏக்கர்?

(எ) அந்த விவசாயிகள் மேற்படி நிலங்களுக்குப் பட்டா கொடுக்கக் கோரினரா?